உ

ஓம் பரப்பிரஹ்மணே நம

# ஞான வியவகாரம்.

இவை

திருவாரூருக்கடுத்த கலங்கேகுடியிலிருக்கும்,

பண்டிதர் ஸ்ரீமான்

**T. S. நாராயணசாமி ஜோசியர்**

அவர்களாலியற்றப்பட்டு

**K பஞ்சாபிகேசய்யரவர்கள்**

வேண்டிக்கொண்டபடி

தஞ்சை

"ஸ்ரீ வித்தியாவிநோதினி அச்சுக்கூடத்தில்"
பதிப்பிக்கப்பட்டது.

---

1908.

விலை அணா 8

காப்பிகள் 1500.

# அறிவிப்பு.

இப்புத்தகம் வேண்டியவர்கள் அடியிற்கண்ட இடங்களில் நேரிலாவது வி. பி. மூலமாயாவது பெற்றுக்கொள்ளலாம். வி பி. சார்ஜ பிரத்தியேகம். ஒரே தடவையில் 10 புத்தகம் வாங்குவோர்களுக்கு ஒரு புத்தகம் இனாமாகக்கொடுக்கப்படும்.

Messrs. V. கோவிந்தன் & பிரதாஸ், வடக்குவீதி, தஞ்சாவூர்.

பிரம்மஸ்ரீ T. S. நாராயணசாமி ஜோசியபண்டிதர், ராஜகோபால சுவாமி கோவில் வீதி தஞ்சாவூர்.

M. R. Ry. K. பஞ்சாபகேசய்யர், கிளர்க் சத்திரம் தாசில்தாரவர்களாபீசு, தஞ்சாவூர்.

" V. கிருஷ்ணய்யா, கலவிக்குடி, அடியக்கமங்கலம் போஸ்ட் S. I. R.

" K. S. வெங்கிடராமய்யரவர்கள், முதலாவது கிரேட் பிளீடர் நாகபட்டணம்.

" ராமலிங்கம்பிள்ளை, ஸ்கூல்மாஸ்டர் மேட்டுப்பாளையம், திருத்துறைப்பூண்டி தாலூகா.

பிரம்மஸ்ரீ குருச்சி ராமானுஜாசாரியார், ஷை தாலூக்கா விளக்குடி.

M. R. Ry. துரைசாமி ஐயரவர்கள், உமையாள்புரம் ஸ்கூல் மானேஜர்.

**T. S. நாராயணசாமி ஜோசியர் அவர்கள்,**

புக் புரோப்ரைட்டர்,

கல்விக்குடி.

## பரப்பிரம்மஸ்துதி.

உலகமுதல் பொருளை யுமபர்க்குணா வரிதாம பொருளை
ஓதிய வேதாகமத்தினுச்சியி லுடைய பொருளை
பலகலையின பொருள் முடிவின முடிவான பொருளைப்
பற்றறப்பற்றிய பெரியோர் பரவியவான பொருளை
புலைதிவலை நுரைகடலி லுதித்தொடுங்கு மாபோ
லகிலாண்ட முதித்தொடுங்கு மதின மூலப்பொருளை
இலகிய சற்குரு வாகியாளுகும பொருளை
யெந்நாளும பரமபொருளையாம வணங்குதுமே.

ஞானவியவகாரமென்னும், இந்த புஸ்தகமானது,

பரமஹம்ஸ ராயவதரித்த,

ஸ்ரீ சங்கராசாரியரவர்கள் பரம்பரையான வித்தியாரண்ணிய ஸ்வாமிகளால் செய்யப்பட்ட பஞ்சதசி என்னும் வேதாந்த வாக்கியார்த்தமான ஸமஸ்கிருத பாஷையிலிருந்து எளிதில் நன்றாய் மனதில் பதியுமாறு வியவகாரமாயும் - யுக்தியாயும் - சாதுரியமாயும் யாரும் அங்கீகரித்து ஆனந்திக்குமாறு தெளிவான தமிழ் நடையில் விளக்கிக்காட்டி, ஜனமமெடுத்த மானிடர் ஆண்-பெண் இருபாலார்க்கும படிப்பினையாயிருக்கும பொருட்டு அமைக்கப்பட்டிருக்கிறது.

---

इत्थंप्रवक्तार ।

ब्रह्मश्री ।

यज्ञस्वामि शास्त्रिणः ॥

तत्वात्मा ध्यात्मिकानि प्रविशदमलशा ।
ज्ञातुमिछंति येयेशास्त्रार्थ ज्ञानहीना ।
सततमपित्रथालौकिका सत्तचित्ता तमिं पश्यतु ।
सर्वे सकुतुकमुचितन्यायवाक्य प्रबध ।
श्रीमन्नारायणाख्यं द्रविडकविकृतं धीविनोदैकहेतु ॥

உ

ஓம் பரப்பிரஹ்மணேநம:

# ஞான வியவகாரம்.

அண்டபிண்ட பிரமாண்ட அகண்டமண்டலாதிபதியாகிய பரிவிராட்டு கோட்டாரவர்கள் சமுகததிறகு.

பிரவாத்தி வருஷத்திய நிவர்த்தி நம்பர்.

## வாதி.

நிரஞ்சனக்கோட்டை ஜில்லா, சிரமங்கலநதாலூகா, நவத்துவாரமங்கலம் மாகாணம், கண்ணனூரிலிருக்கும், கருவூர்ஸ்வயம்பிரகாசிமுதலியார் குமாரர், ஜாதி சுக்கிலம், மதம் சம்மதம், தொழில் பந்தம், ஏகவயதுள்ள ஆத்மஞாத பண்டிதா.

ஷை தரப்பு வக்கீல்கள்.

| | |
|---|---|
| பக்திஞாத பண்டிதர் | 1. |
| வைராக்கிய ராயா | 2. |
| விவேகமூர்ததி ஐயர் | 3. |

## பிரதிவாதிகள்.

ஆவரணசக்திபுரம் ஜில்லா, அவித்தியாமங்கலந் தாலூகா, அவிவேகபுரம் மாகாணம்,· சிதாபாசக்குடி கிராமத்திலிருக்கும், ஜாதி பலபல, மதம் பலவிதம், தொழில விதண்டை.

| | |
|---|---|
| இராகரூவுத்தன் | 1. |
| துவேஷ மூாததிராவ | 2. |
| காமா நாயககன | 3. |
| குரோதப்பையா | 4. |
| லோபகாத பிளளை | 5. |
| மோகஞாத பண்டிதர் | 6. |
| மதத்த நாயுடு | 7. |
| மாசசரிய முதலியாா | 8. |
| ஈருஷை செட்டியாா | 9. |
| அஸூயை ஐயங்காா | 10. |

டம்ப ராஜா 11.
தர்ப்பப பத்தன 12.
அகங்காரச்சாம்பான் 13.

ஷை தரப்பு வக்கீல்கள.

மண்ணாசை உடையார் 1.
பெணணாசை நயினா 2.
பொன்னாசை முதலியார் 3.

## செக்ஷன்.

சாமவேதச்சாங்தோக்கிய உபநிஷத்தினபடி வாதி பிராது.

எனக்குப் பூர்வீகசசொநதமாகிய பரமபத க்ஷேத்திரத்தைச சார்ந்த அறிவானநதபுரம் ஏகபோக கிராமங்களாகிய, மூலக குளம் 1. ஸ்வாதிஷ்டானபுரம 2. மணி பூரகமங்கலம 3. அநாகதப் பட்டி 4. விசுத்தி நல்லூா 5. ஆக்ஞைக்குடி 6. இநத கிராமங்களை சாகுபடி செய்யுங்காலஙகளிலும, தண்ணீா பாயுங்காலங்களிலும, மகசூல் காலஙகளிலும, ஷை பிரதிவாதிகள என்னுடைய சித்த மேழியை ஒடித்தும, ஞானப்பயிரில் இன்பதுன்பமான மாடுகளை விடடழிததும, வைராககிய கண்ணியைததூாநதும், கருணை ஏரி யின் பாயமடைகளைக் கட்டியும, கண்வாயகளை வெட்டியும, பயி ரின ததது்வ பலனகளை களைபரிகக வொட்டாமல செய்வதுந் தவிர, குததகை ஏற்பட்டிருககிற 21,600 கலம் மகசூல நெலலை தடவை ஒன்றுக்கு நாலு நாலு கலமாகச சூரையிட்டும, எனனு டையஸவானந்த சுகானுபவததில இருககவொட்டாமல தொந் திரவு செயதுவருகிறாா்கள்.

ஆகையால் கோாட்டாரவாகள தயவுசெய்து என்னுடைய சாக்ஷிகளைவிசாரிததும, எதிரிகளின கட்டுப்பாடான சாக்ஷிகளின் வாககுமூலஙகளை நிராகரிததும, வாதிபக்கம தீாப்புசெய்யவேணு மாய் பிராாததிககிறாா. பிராதின பொறுமானம துகை. ௦ இட்டா.

வாதி தரப்பு சாக்ஷிகள

ஸாத்விகபுரம விவேகதீக்ஷதர் 1.
வாயுபுரம் மாருதாசாரி 2.

மணிமங்கலம் வீக்ஷிண்ணிய கடாக்ஷராயர் 3.
ஸப்தாதிபுரம் சாந்தலிங்கசாஸ்திரி 4.
கர்மேந்திரியநல்லூர் வாக்குனைத பண்டிதர் 5.
மேலையூர் அவ்யக்தனையா 6.
ப்ராசீனபுரம புராதனஸ்ரௌதி 7.
சத்துவக்குடி ஸாஜனப்பையர் 8.

பிரதிவாதி தரப்பு சாக்ஷிகள்.

கோசமாபுரம அநாத்மநாதசெட்டி 1.
ஷையூர் அவிவேகப்பத்தன் 2.
பொய்யூர் வலலாளருவுததன 3.
பாழூர அபாண்டமுதலியார 4.
அவித்தியாமங்கலம் சிதாபாசய்யர் 5.
நிஷேதமங்கலம் குடிமயக்கக்கோனன் 6.
கீழையூர அபானசேர்வைகாரன் 7.
ஞூதபுரம சோரனுத நாவிதன் 8.

பூர்வோதயமாகி வநதமேதியில் அந்தக்கர்ணநல்லூரில் வியாஜ்யமூலம் உண்டாகியிருக்கிறது.

இநத நம்பரில் ஷை நிலம சிதாபாசனென்பவன் தான்பாத்தியப்பட்டவனென்றும, தன்னையும் பிரதிவாதியாகச் சேர்த்துக் கொள்ளவேணுமென்றும, மனுககொடுததிருககிறபடியால், ஷை யானை 14-வது சப்ளிமெண்டு பிரதிவாதியாகச சேர்க்கப்பட்டிருக்கிறது.

இதுவிறக அவியெனற பெயரையுடைய மாயையானவள் ஜகத்முழுமையும் தன்னுடையதென்றும், தனக்கே முழுபாத்தியமென்றும, ஷை பிரதிவாதிகளுககு யாதொரு பாத்தியமில்லையென்றும், பாத்தியமனுக்கொடுத்து தன்னுடைய பாத்தியத்தை ஸ்தாபிக்கவேணுமென்று விவகரிக்கிறாளாகையால் அவளை முதல் பாததிய மனுதாரியாகச சோக்கப்பட்டிருக்கிறது.

வாதியின்வாக்குமூலம்.

ஷை தரப்பு வக்கீல்களால் விசாரிக்கப்படுகிறது.

கேழ்வி.—நீர்யார்?

விடை.—நான் ஜீவாத்மாவாகியஜீவன்.

கே.—நீர் எந்தவூர்?

வி.—நானிருப்பது முப்பாழும் பாழாம் முடிவிலொரு சூனியமாம். அப்பாழும் பாழுமென்று சொல்வது அதானது பரமபத க்ஷேத்திரமென்று சொல்வது.

கே.—உம்முடைய தகப்பன் பெயரென்ன?

வி.—அது எனக்குத் தெரியாது.

கே.—உமக்கு வயதென்ன?

வி.—அதுவும் எனக்குத் தெரியாது.

கே.—உமக்கு தொழில் யாது?

வி.—நான் பாசாஅடவியில் ஈடுபட்டு அக்ஞானப் பயிர் அபிவிர்த்தியடையுமாறு பாழும் நிலததில் சாகுபடிசெய்து வருகிறேன்.

கே.—ஷை பிராதில் கண்டவைகள் உண்மைதானு?

வி.—உண்மைதான்.

கே.—உறுதியாய்சசொல்லும்?

வி.—உறுதியாகவே சொல்லுகிறேன்.

## பிரதிவாதி வக்கீல் கிராஸ்.

கே.—உம்முடைய தாய் தகப்பன் பெயர் தெரியாதென்று சொன்னீரே அது எதனுல்?

வி.—எனக்கு அன்னை எததனை எத்தனை அன்னையோ, அப்பனெததனை எததனை அப்பனே, பிள்ளை எத்தனை எத்தனை பிள்ளையோ, பெண்டீர் எததனை எத்தனை பெண்டீரோ, முன்னை எத்தனை எத்தனை ஜனமமோ, மூடனுனதால் தெரியாதென்று சொன்னேன்.

கே.—உமக்கு வயதுக்தெரியாதென்று சொன்னீரே அதன் காரணம் என்ன? கேட்டதற்கு பதில் சொல்லும்

வி.—நானின்ன காலத்திலுண்டானவனென்று குறிப்பிடக் கூடாமையினுல்தான் தெரியாதென்று சொன்னேன்.

கே.—உம்முடைய மதம் என்ன ?

வி.—எத்தனை மறைகளுக்கும் எத்தனை மந்திரங்களுக்கும் எட்டப்படாத கர்த்தனைக் கருணைசெய்யென்று நித்தம் நித்தந் தொழுவதெங்கள் மதம்.

கே.—உம்முடைய குலமல்லது ஜாதி என்ன ? கோத்திரம் என்ன ? மானமென்ன ? சாஸ்திரமென்ன ? நீதி என்ன ? இவ்வரலாறுகளை ஒவ்வொன்றாய்ச்சொல்லும்.

வி.—அத்தனே காத்தனே பரனே பராபரனே நானென்றும் மறியேனென்று கத்திக்கத்தி ஆனந்த நீர் விடுவதெங்கள் விழிகள். பக்தர்கள்மிலேசசரென்று நிந்திக்கும்போது பகவத்பாதங்களைப் பற்றி சுகம்பெறுவதெங்கள் விழிகள். உறுகின்ற பாஞ்சாலிக்கு உடையளித்தவனை ஓதியோதி புகழ்வதெங்கள்மானம். ஸப்த முனிபிருகு நாரத பிரஹலாத பராசர புண்டரீக வியாஸவஸிஷ்ட விசுவாமித்திர அம்பரீஷ சுகர் சவுனகர் பீஷ்மர் முதலான முன்னோர்கள் துதித்துச் சாத்திய மறைகளின்படி அவனுடைய விமல பாதம் தொழுவதெங்கள் சாஸதிரம். திட்டி வெட்டிக் குட்டினாலும் அஷ்டாக்ஷரபஞ்சாக்ஷரப் பொருளை துதித்திருப்பதெங்கள் கோததிரம். பின்னுமெங்கள் ஜாதிசுக்கிலம்.

போதும் போதும்—உம்முடைய புராணம் போதும்.

1-வது பிரதிவாதி இராகருவுத்தனை விசாரணை:—

(ஷை தரப்பு வக்கீல்களால் விசாரிக்கப்படுகிறது.)

கே.—நீ எந்தவூர் ?

வி.—நானிருப்பது ஜீவகோடிகளின மனோராஜ்யத்தில் முக்காலங்களிலும் வசித்துவருகிற சிதாபாசக்குடி.

கே.—உன்பெயரென்ன ?

வி.—இராகருவுத்தனென்ற பெயர்.

கே.—உன் தொழிலென்ன ?

வி.—எனக்கு நல்ல ரூபவதியாயும் குணவதியாயும்அமைந்த அக்கினிசாக்ஷியாய் பாணிக்கிரகணம பண்ணினபெண்டீரிருந்தாலும் பிறர்மனைவிகளான பரஸ்திரிகமனம்பண்ணவேணுமென்கிற

சித்த விருத்திக்கி இராகமென்று பெயர். அப்படிக்கொத்த பெயரைக் கைவிடாமல் சகல ஜீவகோடிகளுட் புகுந்து அப்படிக் கொத்தகுணங்களை நிலைநாட்டி கீர்த்திபெறச்செய்வதைத் தவிற வேறுதொழில தெரியாது.

## 2-வது பிரதிவாதி துவேஷ மூர்த்திராவ்.

கே.—நீ எந்தவூர் ?

வி.—சிதாபாசக்குடிதான் நானிருப்பதும்.

கே.—உன் பெயரென்ன ?

வி.—என்பெயர் துவேஷமூர்த்திராவ்.

கே.—உன் தொழில் என்ன ?

வி.—என்னுடைய எண்ணத்தின்படி ஓர்மை உதவிக்கு வாராமலும் அதைக்கெடுத்து அபகாரம் செய்பவர்களிடத்தில் அப்படிகொத்தவர்களுக்கு எந்தக்காலத்திலும் பிரதி அபகாரம்செய்யவேணுமென்று துவேஷம் வைத்து நிலைநாட்டி வைப்பதுதான் என்தொழில்.

## 3-ம் பிரதிவாதி காமாநாயக்கன்.

கே.—நீ எந்த ஊர ?

வி.—ஷெயூாதான்.

கே.—உன பெயரென்ன ?

வி.—என பெயர் காமாநாயக்கன்.

கே.—உன் தொழிலென்ன ?

வி.—எனக்கு விசித்திரமான இல்லிடம், சருவமானிய ஏக போக கிராமம, ஆபரணம், தனம், தானியம் இதுகள் சம்பூரண மாயிருந்தாலும இன்னமுமநேகம் சம்பாதிக்க வேணுமென்ற சித்தவிருத்திதான் எனக்குத தொழில்.

## 4-ம் பிரதிவாதி குரோதப்பையர்.

கே.—நீ எநதவூர் ?

வி.—நானும் ஷெ யூர்தான்.

கே.—உன் பெயரென்ன ?

வி.—என்பெயர் குரோதப்பையா.

கே.—உனக்குத தொழிலென்ன ?

வி.—எனக்கு வேண்டிய காரியங்களில் விக்கினம பண்ணி ருலும, என் பொருளை யாராவது அழிததாலும், அவர்களிடத்தில ஆககிரமமாக விகர்ப்பிததுவருகிற சிததவிருததிக்கு குரோதமெனகிற பெயர்வகிததேன. அதை நான் சகல ஜீவகோடிகளுக்கும் போதித்துவைப்பதே எனககுத தொழில.

5-ம் பிரதிவாதி லோபநாதபிள்ளை.

கே.—நீ எநதவூர ?

வி.—ஷெயூர்தான.

கே.—உன் பெயரென்ன ?

வி.—என் பெயா லோபநாதபிள்ளை.

கே.—உனக்குத் தொழிலென்ன ?

வி.—எனக்கு அளவில்லாத சொதது இருநதாலும் இன்னம் எநதவிதத்திலாவது பணம் சேகரம செய்வதை தவிர, அதினின்று ஒரு காசுகூட சிலவு செயயக்கூடாதென்ற சித்தவிருத்திக்கி லோபநாதபிள்ளையென்ற பெயரை நானவகிததேன். நான யாவத்திராளுடைய மனதிலிருநது கொண்டு அப்படிக் கொதத எனனுடைய குணத்தை விருததிசெய்து வைப்பதே என் தொழில.

6-ம் பிரதிவாதி மோகநாத பண்டிதா.

கே.—நீ எநதவூர ?

வி.—ஷெ யூரதான்.

கே.—உன் பெயரென்ன ?

வி.—என பெயர் மோகநாத பண்டிதா.

கே.—உன் தொழிலென்ன ?

வி.—நான் தேடி சமபாதித்த பதார்த்தத்தின்பேரில் பிரமாதமான ஆசையை விகர்ப்பித்துக் காட்டுகிற சிதத விருத்திக்கு மோகமென்ற பெயர். ஜன்மாந்தர வாசனையினுலது எனக்குக்

கிடைததது. அப்படிக்கொத்த குணத்தை நான் விடாமல் சகல ஜீவகோடிகளுக்கும் அதை உபதேசித்துவைப்பதே என்தொழில்.

7-ம் பிரதிவாதி மதத்தநாயுடு.

கே.—நீ எந்தலூர் ?

வி.—ஷையூர்தான்.

கே.—உன் பெயரெனன ?

வி.—எனபெயர் மதத்தநாயுடு.

கே.—உனக்குத தொழிலென்ன ?

வி.—எனக்கிருக்கிற ஐசுவரியச செருக்கினுல் கெருவங் கொண்டு கிருத்தியா கிருததியங்களைப் பாராமலும், பாபபுண்ணி யங்களை நினையாமலும், விகர்ப்பிததுக் காட்டுகிற சித்த விருத்தி க்கு மதமெனறு பெயர். நான் அதை சகல ஜீவகோடிகளுக்கும போதிதது அசைய வொட்டாமல் திடப்படுத்தி வைப்பதுதான் என் தொழில்.

8-ம பிரதிவாதி மாச்சரிய முதலியார்.

கே.—நீ எநதலூர் ?

வி.—ஷையூரதான்.

கே.—உன பெயரென்ன ?

வி.—என்பெயர் மாச்சரிய முதலியார்.

கே.—உன்தொழிலென்ன ?

வி.—ஒருவன்சுகமாயிருந்தாலும், விததுவனுயும், நாலுபே ருக்கு கௌரவமாயிருந்தால், அதைநான்பார்த்து கொஞசங்கூட சகியாமல விருததியடைய விகர்ப்பித்து வருகிற சித்தவிருத்திக்கு மாசசரிய முதலியாரென்ற பெயர் வந்தது. அது என்னைவிட்டு கொஞசங்கூட மாறாது. ஆகையால் நான்பிறர்வாழ சகியாமலிருக் கிற சித்த விருத்திதான தொழில்.

9-ம பிரதிவாதி ஈருஷை செட்டியார்.

கே.—நீ எநதலூர் ?

வி.—ஷையூர்தான்.

கே.—உன பெயரென்ன ?

வி.—என் பெயா ஈருஷை செட்டியாா என்று பெயர்.

கே.—உனக்குத் தொழிலென்ன ?

வி.—என்க்கு வநத துககமும கிழததன்மையும் பிறருக்கும் வரலாகாதோவென்று விகாபபிததுககாட்டுகிற சித்தவிருததிக்கு ஈருஷை செட்டியாரெனற பெயரை வகித்தேன். ஆனதால் எனககுக்கிடைதத அப்படிக் கொதத குணத்தைவிடாமல சகலருக்கும திடபபடுததி வைபபதே என தொழில்.

10-ம பிரதிவாதி அஸூயை ஐயங்காா.

கே.—நீ எநதவூா ?

வி.—ஷை யூாதான.

கே.—உன பெயரென்ன ?

வி.—என் பெயா அஸூயை ஐயஙகாா.

கே.—உன தொழிலென்ன ?

வி.—நான அடையும சுகம எனக்கு வரும லாபம் கீர்த்தி சன்மானம பாக்கியம இதுகள பிறருககும வரக்கூடுமோ, நானே அதுகளை அனுபவிகக வேணுமெனற சிதத விருத்திக்கு அஸூயை ஐயஙகார் எனற பெயா வநதது. இபபடிக்கொதத பெருமையான குணம எனக்குரியது. இது எனனை அகலவிடாமல் ஸ்திரபபடுததிவைப்பதே எனககுத தொழில.

11 ம பிரதிவாதி டம்ப ராஜா.

கே.—நீ எநதவூா ?

வி.—ஷை யூாதான.

கே.—உன பெயரென்ன ?

வி.—என பெயர் டமபராஜா.

கே.—உன் தொழிலென்ன ?

வி.—நான் செய்த தான தருமங்களும் பரோபகாரஙகளையுங கண்டு பலபோகளும புகழ்ந்து சொல்லிக்கொள்ளவேணுமெனறு விகாபபிததுக காண்பிவிக்கிற சித்த விருத்திககு டம்ப

ராஜாவென்ற பெருமையான பெயர் எனக்குக் கிடைத்தது. அப்படிக் கொத்த பெயரை கைவிடாமல் சகல ஜீவகோடிகளுள் புகுந்து அதை மாறவிடாமல் ஸ்திரப்படுத்தி வைப்பதே என் தொழில்.

## 12-ம் பிரதிவாதி தாப்பபயத்தன்.

கே.—நீ எந்தவூர்?

வி.—தேஹ யூர்தான்.

கே.—உன் பெயரென்ன?

வி.—என் பெயர் தாப்பபயத்தன்.

கே.—உனக்குத் தொழிலென்ன?

வி.—என்னைக்காட்டிலும் ஐசுவரியத்திலும், கீர்த்தியிலும், குணத்திலும், ரூபத்திலும், இன்னமொருவனிருக்கிறானென்று விகாப்பித்துக் காட்டுகிற சித்த விருத்திக்கு தாப்பயத்தனென்ற பெயர் வந்தது. நான் சகல ஜீவர்களுடைய மனதுக்குள் புகுந்து என் பெயரை சிரேஷ்டப்படுத்தி வைப்பதே என் தொழில்.

## 13-ம் பிரதிவாதி அகங்காரச்சாம்பான்.

கே.—நீ எந்தவூர்?

வி.—தேஹ யூர்தான்.

கே.—உன் பெயரென்ன?

வி.—அகங்காரச் சாம்பானென்ற பெயர்.

கே.—உன் தொழிலென்ன?

வி.—அடே பயலே என்னை நீ யறியாயோ; என் சேதி தெரியாதா; நான் பிடித்த காரியத்தை விடுவேனா, என்னை எதிர்த்தவன் கெடவில்லையா; நான் முன் வைத்த காலை பின் வாங்குவேனா; நீ தானா எனக்கு புத்தி சொல்லுகிறவன் என்று ஆக்கிரமித்து வருகிற சித்தவிருத்திக்கு அகங்காரச் சாம்பனென்ற பெயர் எனக்குரியது. நானதை எப்போதும் இடைவிடாமல் சகல ஜீவகோடிகளுடைய ஹிருதயத்தில் வசித்து வருகிற முக்கிய பிரதான தேவடுகானே. தேஹ ஜீவகோடிகள் என்னையே முக

மாய் ஆராதித்து வருகிறார்கள், ஆனாலும் அவர்களுடைய மனோரதத்தை பூர்த்திசெய்து சாசுவதமானபெயரெடுத்து மேன்மையை அடையச் செய்கிறதே எனக்குத தொழில்.

## இனிவாதிதரப்புசாக்ஷிகள் விசாரிக்கப்படுகிறார்கள்.

### 1-வது சாக்ஷி விவேக தீக்ஷதர்.

(வாதி வக்கீல்களால விசாரிக்கப்படுகிறது)

கே.—உமக்கு எந்தவூர்?

வி.—நானிருப்பது ஸாதவீகபுரம்.

கே.—உமமுடைய பெயரென்ன?

வி.—என் பெயர் விவேக தீக்ஷதா.

கே.—பிரமாணமாயச்சொல்லும்?

வி.—பிரமாணமாகவே சொலலுகிறேன.

கே.—இந்த நமபரின் பிரதிவாதிகளை உமக்குத தெரியுமா?

வி.—தெரியும்.

கே.—என்ன விதமாய்த தெரியும்?

வி.—நானிருக்கும க்ஷேத்திரததிலேயே இவாகளும் சஞசரிக்கிறவாகளாகையால இவாகளெலலோரையும் எனக்குத் தெரியும.

கே.—இவாகளில முதல் பிரதிவாதி இராகருவுததனுடைய நடவடிக்கை என்ன?

வி.—இவன பூாவததில் திருலோகாதிபதியாகிய இராவணேசுவரனை மயக்கிவைதது அதினாலவன ஸாக்ஷாத் லோகமாதாவாகிய ஜானகியை அபகரிதது, அதன் நிமிததம் அவன் புத்திர மித்திர களத்திராதிகளை இழந்து பிராண ஹானியாய் இகபரங்களில அபகீர்த்தியை யடைந்தான். பின்னும் சுந்தோபசுந்தர்களை மயககி அதினாலவாகள் திலோத்தமையைக் கண்டு என் பாரியை உன் பாரியை யென்று அடித்துக்கொண்டு அழியும்படி செய்ததும், இன்னம் இப்போதைக்கும் பரஸ்திரி கமனம் செய்யும்படியாய தூண்டிவிடுகிற தொழில அவனுக்கு எபபோதுமே; இவன் விஷயம் இது எனக்குத் தெரியும்.

கே.—2ம் பிரதிவாதி துவேஷமூாததிராவ்செயகைளன்ன?

வி.—இவன் பூர்வத்தில் ஹிரணியகசுபு வென்பவனுக்கு போதித்து அதினலவன் தன தமையனைக் கொன்ற ஸ்ரீமன-நாராயணனைக்கொல்லவேணுமென்று நினைப்புண்டாகிஅது நிமித்தம அவன் மாண்டானுகையால அவனும் மிகுந்த கெட்டவனென்றும தெரியும.

2-வது சாக்ஷி வாயுபுரம் மாருதாசாரியாா.

கே.—உமககு எநதவூா?

வி.—நானிருபபிடம வாயுபுரம.

கே.—உமமுடைய பெயரென்ன?

வி.—என்பெயா மாருதாசாரியாா.

கே.—இநத நம்பரில உமககுத் தெரிநததை வாஸதவமாய்ச சொல்லும?

வி.—எனககுத் தெரிநததை வாஸதவமாயச சொல்லுகிறேன்.

கே.—இதில் 3-ம பிரதிவாதி காமாநாயக்கனைத் தெரியுமா?

வி.—தெரியும்.

கே.—என்னவிதமாகத தெரியும?

வி.—நானிருக்குமிடஙகளில அடிக்கடி சஞசரிக்கிறவனுனதால் நன்ருய்த தெரியும.

கே.—இவன் நடவடிக்கைகளென்ன?

வி.—இவன் பூாவததில் நரகாசுரனெனபவனுடைய மனதுள் புகுநதுபோதிதது, அதனுலவன இலக்ஷம ஸதிரீகளைகலியாணம் பண்ணவேணுமெனற எண்ணமாகி, தேவஸ்திரீகளை பதினுயிரம் பேர்களை சிறைபிடித்துவநது, அதின்நிமிததம் ஸ்ரீகிருஷ்ணபகவானுல் நாசமடைந்தானுகையால இவன் கெட்டவனென்றுதெரியும்.

3-வது சாக்ஷி விக்ஷின்ணியகடாக்ஷராயர்.

கே.—நீர் எநதவூா?

வி.—நானிருபபது மணிமஙகலம்.

கே.—உம்முடைய பெயரென்ன?

வி.—என் பெயர் வீக்ஷிணணியகடாக்ஷராயா.

கே.—இந்த நம்பர் விஷயமாய் உமக்குத் தெரிந்ததை பிரமாணமாய்ச்சொல்லும்?

வி.—எனக்குத் தெரிந்தெதுவோ அவைகளை பிரமாணமாகச் சொல்லுகிறேன்.

கே.—இந்த 4-ம் பிரதிவாதி குரோதப்பையரைத் தெரியுமா?

வி.—தெரியும்.

கே.—என்னவிதமாய்த் தெரியும்

வி.—நான் வசிக்குமிடத்தில் அடிக்கடி வருகிறபடியால் செம்மையாய்த் தெரியும்.

கே.—அவனுடைய நடவடிக்கைகளென்ன?

வி.—இவன் பூர்வத்தில் பகாசுரன் தனது புசிப்பிறகுவிக்கினஞ்செய்த பீமராஜன் பேரில் குரோதம்வரச் செய்ததினால்நாசமடையச்செய்தான். இப்போதும் அநேகர்களை இவனுடைய பராக்கிரமத்தை உடகொள்ளச்செய்து மடியச்செய்வதைபார்த்துமிருக்கிறபடியால் இவன் கெடுதியுள்ளவனென்று எனக்குத் தெரியும்

4-வது சாக்ஷி சாந்தலிங்க சாஸ்திரி.

கே.—நீர் எந்தவூர்?

வி.—நானிருப்பது சபதாதிபுரம்.

கே.—உம்முடைய பெயரென்ன?

வி.—என் பெயர் சாந்தலிங்கசாஸ்திரி.

கே.—இந்தகேசில் உமக்குத் தெரிந்ததை உண்மையாய்ச் சொல்லும்?

வி.—உண்மையாகவே சொல்லுகிறேன்.

கே.—இதில் 5-ம் பிரதிவாதி லோபநாதபிள்ளையைத்தெரியுமா?

வி.—தெரியும்.

கே.—என்னவிதமாய்த தெரியும்?

வி.—இவர் நானிருககுமிடததுக்கு வருவதும் போவதுமுணடு. அவரை செம்மையாய் நானறிவேன்.

கே.—அவருடைய விருத்தாநதமென்ன?

வி.—இவர் பூாவத்தில் துரியோதனமகாராஜனனவன் சூதாடிகெலித்த பஞசபாண்டவர்களுடைய இராஜயத்தை அவர்களுக்குக் கொடுககாமலும் அதில் நின்றும் ஒரு ஊசி முனை அவ்வளவு பூமிகூட கொடுக்கமாட்டேனெனற லோபகுணத்தைபோதித்து அதினலவனை நாசததையடையச்செய்த மகாலோபி; இவன கெட்டவனெனறு எனககுத் தெரியும.

5-வது சாக்ஷி வாக்குநாதபண்டிதர்.

கே.—நீர் எந்தவூர்?

வி.—நானிருப்பது கர்மேநதிரியநல்லூர்.

கே.—உம்முடைய பெயரென்ன?

வி.—வாக்குநாதபண்டிதரென்ற பெயா.

கே.—இநத கேசில் உமக்குத் தெரிநததை உறுதியாய்ச் சொல்லும?

வி.—உறுதியாகவே சொல்லுகிறேன.

கே.—6-ம பிரதிவாதி மோகநாதபண்டிதரைத் தெரியுமா

வி.—தெரியும.

கே.—எப்படித தெரியும்?

வி.—நானும் பணடிதர் தான்; அவரும் பண்டிதா தான்; நாஙகளிருவரும் ஒருமதநதான. அவர் நானிருப்பிடத்துக்கு அடிக்கடி வருவார். அவரை எனக்கு செம்மையாய்த தெரியும்.

கே.—அவர் செய்கை என்ன?

வி.—அவருடைய பட்டப்பெயா மாத்திரம் பண்டிதர் தான; இவர் குணம மாத்திரம் கண்டிதர். அது எப்படி என்ருல் முன்

காலததில் தசரதசக்கிரவர்த்தியானவர் மகாபரிசுத்த ஆத்மா.அப படிக்கொத்த மகாத்மா மனதுக்குள புகுந்து கைகை இடத்தி லும்ஸ்ரீ ராமனிடத்திலும் அதிக மோகம வரசசெய்து அவருடை யமேனமையான கீர்ததியை பலரும தூஷிக்கச் செய்து வைத்த துநதவிர அவரையும மரணமடையச செய்த கண்டகரிவாதா னென்று எனக்கு நன்ருய்த் தெரியும

6-வது சாக்ஷி அவ்யக்தஞதய்யா.

கே.—நீர எநதவூர ?

வி.—நானிருபபது மேலையூா

கே.—உமமுடைய பெயரென்ன ?

வி.—எனக்கு அவ்யகதஞாதயயரென்ற பெயா.

கே.—இநத நமபா விஷயததில தெரிநததை எதார்த்தமா கசசொல்லும் ?

வி.—ஐயா நான எதாாததமாகவே சொல்லுகிறேன்.

கே.—நீா நலல வியாபகராயும் மேலையூரானபடியாலும் எல் லாம அறிநதவராகவேயிருக்கவேணுமானதால இந்த நம்பா பிரதிவாதிகளாகிய 7-8-9-10 எதிரிகளாகிய மதத்தநாயுடு-மாசச ரியமுதலி-ஈருஷை செட்டியார்- அஸூயை ஐயஙகார் இவர்களு டைய நடவடிக்கைகளையும யோகியதைகளையும் ஒவ்வொன்ருய் சசொல்லும ?

வி.—இவாகள நாலவரும என இருபபிடமான மேலையூரு ககு நொடிககி நூறுதடவை வநது போவார்கள். இவர்கள் யோக் கியதையாவும எனககுத தெரிநதவைகள தான். இதில் 7-ம் பிர திவாதி மததநாயுடுவென்பவன் பூாவததில கார்த்தவீரியார்சசு னனுககு மததததையுணடுபண்ணி அதினலவன் தன்னிடத்தில் வ நத மஹாரிஷியான நாரதஸ்வாமியை மதிக்காமலும் உபசாரம் பணணும்லும் கொவிததிருந்ததைக்கேடட பரசுராமனல் பிரா ணஹானி பநதுநாசம இராஜயஹானி இகபரங்களிலபகீர்த்தி இவைகளையடையசசெயதவன இந்த மதத்தநாயுடு தான்; இவன் கெடடவன.

பின்னும் 8-வது பிரதிவாதி மாசசரியமுதலியோவென்றால்; முன்னொருகாலத்தில சிசுபாலனென்பவனுககு இவனுடையகுண தகை போதிதது அதினாலவன இராஜஸூயயாகத்தில் அக்கிர தாம்பூலம வாஙகததக்கவனாரெனறு விசாரிதது ஸ்ரீ கிருஷ்ணபக வானுக்குக்கொடுத்ததை சகிக்காமல், அநதசிசுபாலன் பிராண ஹானிபநது நாசம் இராஜயஹானி இகபரங்களிலபகீர்ததியை யடைய இநத மாசசரியமுதலியே காரணம்; இவன் மிகவும கெடுதியுள்ளவனென்று தெரியும

பின்னும ஈருஷை செட்டியாரோவெனறால, முன்னொருகா லததில் அருணாசுததனெனபவனுககு இந்த புததியை போதிதது அதினாலவன தனககுவநத துக்கம தனதிஷடனான வாணாசுரனு கு வரலாகாதாவெனறெதிாதத ஈருஷை குணததினாலவன பிரா ணஹானி பநதுநாசம இராஜயஹானி இகபரஙகளிலபகீாததி இவை முதலானதுகளை அடைய இநத ஈருஷை செட்டியாா துண்டுதலினாலேயே; இவனும கெட்டவனே.

அஸூயை ஐயங்காரோவெனறால பூர்வததில் பவுண்டரீக வாசுதேவனிட மனதில புகுநது அதினாலவன தனக்கும வாசு தேவன், ஸ்ரீ கிருஷ்ணனுககும வாசுதேவனெனறு பெயராவெ னறு, அஸூயை குணததினால அவரிடமெதிாதது பிராணஹானி பநதுநாசம் இராஜ்யஹானி இகபரஙகளிலபகீாததிஇவைகளை அ டையசசெயதுவைததுதும இநத அஸூயை ஐயஙகாருடைய குணநதான. இவன மிகுதியான கெடுதியுளளவனெனறும என க்குத தெரியும.

## 7-வது சாக்ஷி புராதனஸரௌதி.

கே.—ஸாமிகள் எநதவூா?

வி.—நானிருபபது பராசீனபுரம.

கே.—தங்களுடைய பெயரென்ன?

வி.—புராதனஸரௌதியெனறு சொல்லுவாாகள.

கே.—இநத நமபரின 11-வது பிரதிவாதி டமப.ாஜாவை தஙகளுககுத தெரியுமா?

வி.—ஆஹா ரொம்ப அறிவேன்.

கே.—எப்படிக்கு அறிவீர்கள்?

வி.—இவர் நான் வசிக்குமிடத்தில் அதிக கெம்பீரத்தோடும் தளுக்குபளுக்கோடும் கையில் சவுக்கம் காலில் பாபாசுமிட்டு என்சமீபமாக வந்து, கனைத்து உருமிக்கொண்டு அதிக உற்ஸாகபுருஷனைப் உருட்டி மிரட்டி மீசையை முறுக்கிக்கொண்டு என்னைக்குப் பயங்காட்டுவார். அவரிடம் நான் பேசாவிட்டாலும் அவர் நடவடிக்கை எனக்கு பூராவாகத்தெரியும்.

கே.—அப்படியா-தாங்கள் மிகவும் பழமையான மனுஷியாளாயும் ஆசார யோக்கியதையுள்ளவர்களாயுங் காணுகிறது. ஆனதால அவன் விருத்தாந்தத்தை எதார்த்தமாய்ச் சொல்லுங்கள்?

வி.—ஐயா நானிதுவரையில என இருப்பிடம் விட்டு எங்கும் போனதேயில்லை. அட்டா ஒரு அபத்தமாகிலும என வாக்கால் வராது. தெரிந்ததைச்சொல்லாவிட்டாலும மகாபாவம் வந்து சம்பவிக்கும. உள்ளதைச சொன்னால நானோ இந்த டம்பராஜா என்னிருப்பிடம வந்து அதிகமான பயத்தை காட்டுவரே.- நானென்ன செய்வேன்? ஆனாலுமிது பெரிய நியாயஸ்தலம. உள்ளதைத்தான்சொல்லவேணும.ஈஸ்வரோரக்ஷது சொல்லுகிறேன்.- இவர் முன்னொருகாலத்தில புருருவமகாராஜனுக்கு இவருடைய டாம்பீக குணத்தைப போதித்து, அதினாலவர் தூர்வாசமஹாரிஷியைப்பார்த்து, நாம செய்கிற யாகத்தைப்போல யாரால் செய்ய முடியும்! எவன் செய்வான! இது நன்றாயிருக்கிறதென்று சந்தோஷிக்கக்கேட்ட தூர்வாசஸ்வாமியானவர், யானை துதிக்கையைப்போல ஆயிரம வருஷம நெய்யைச்சொரிந்து யாகஞ்செய்தவன கூட இப்படித்தன்னை புகழ்ந்துகொள்ளவில்லையே என்று சொல்லி, இதென்ன டம்பயாகமென்றுசொல்ல, அதைக்கேட்டவுடனே கோபங்கொண்ட நிமித்தம அவன் யாகத்தோடே பிராணஹானி பந்துநாசம் இராஜயஹானி இகபரங்களிலபகீர்த்தி இவைகளையடையச்செய்தவரிவர். இக்காலத்திலும் இவர்குணத்தை சர்வபிராணிகளிடத்திலும் காட்டி நாசமடையச்செய்கிறவர் இவரென்று தெரியும்.

8-வது சாக்ஷி ஸர்ஜனப்பையா.

கே.—நீர் எநதவூர் ?

வி.—நானிருப்பது ஸத்துவக்குடி.

கே.—உமமுடைய பெயரென்ன ?

வி.—ஸர்ஜனப்பையரென்ற பெயர்.

கே.—இநத விஷயததில தெரிநததை சததியமாய்ச் சொல்லும் ?

வி.—சத்தியமாகவே சொல்லுகிறேன.

கே—இநத நம்பரின 12-ம பிரதிவாதி தர்ப்பபபத்தனையும் 13-ம் பிரதிவாதி அகங்காரசசாமபானையும தெரியுமா ?

வி.—தெரியும.

கே.—எபபடித தெரியும் ?

வி.—இவாகள் நானிருக்குமிடத்திறகு அடிக்கடி வந்து சுததிப்பாரதது போவார்களானதால நன்றாய்தெரியும.

கே.—இவாகள நடவடிகளைகளென்ன? சொல்லும்.

வி.—இதில தர்பபபபததனெனபவன பூாவததில் சதகநதரனவனிடததில இவனுடைய குணததை உபதேசிதது, அதினாலவன் ஐசுவரியத்திலும், ரூபததிலும, தனக்கு சமானமானவன யாருமில்லையெனறு அமராகளுக்கு உபததிரவம் செய்ததை நாரதவவாமிகண்டு ஸ்ரீ இராமனுககு அறிவிதது, அவா தனது பாரியான சீதையினால் அவன பிராணஹானிபந்துநாசம இராஜயஹானி இகபரஙகளிலபகிர்ததியை அடையசசெய்தது இநத தர்ப்பபபத்தனுடைய குணத்தினாலே தான. இவன மிககெடடவனே.

பின்னும் அகங்காரசசாமபானேவென்றால், முன்னொரு காலத்தில் மதுகைடவரென்பவர்களிடத்தில் பிரவேசித்து, இவனுடைய குணததை திடப்படுததிவைத்து, அதினாலவாகள் மகாவிஷ்ணுவோடு பதினாயிரம் வருஷம் யுத்தஞசெய்து களையாமல் அவர் சந்தோஷித்து வரங்கொடுக்கப போனதை ஆசிக்காமல்

தாமகள அந்த மகாவிஷ்ணுவுக்கு வரங்கொடுக்கிறோம். வாங்கிக் கொள்ளென்று சொன்ன அகஙகார குணததினுல் பிராணஹானி பநதுநாசம இராஜ்யஹானி இகபரங்களிலபகீர்த்தியையடை யசசெய்தது இநத அகங்காரசசாமபன்தான். இப்போதைக்கும கொலை முதலான பாதகங்களுக்கு இவனே மூலகாரணம். இவன் எல்லோரிலும் அதிகமானகெடடவனெனறு எனககுததெரியும.

## இனி கோர்ட்டார் அபிப்பிராயங் கூறுகிறார்.—

இநத நமபரில 1-முதல 8 சாக்ஷிகள வாதி தரபபில் விசாரிக்கப்பட்டது. அவர்கள் ருஜூவினுல வாதியின பிராதுக்கு ஒததாகவே ருஜூவாகிறது. எதிரிகள குறறவாளிகளெனறு நாம நினைககிறோம

இதைக்கேட்டதும திடீரென்று எழுந்து பிரதிவாதிகளுடைய வககீலகள சொலலிககொள்வதாவது:—

பிரதிவாதிகள் இப்போதுள்ள 13 போகளைததவிர வேறு மூன்று பெயர்களிருநதுகொண்டிருககிறார்கள. அவாகளையுமிதில் கூக்ஷிக்காராாகளாகசசோததுககொண்டால எங்கள் தரபபுக்கு ஞாயங்கிடைப்பதுநதவிர, எங்கள தரபபில் 8 சாக்ஷிகளிருக்கிறது. வாதி தரப்பு சாக்ஷிகள் சொல்லிவநததெல்லாம் அபாண்டமான பொயயாகையால, மேறசொலலிய மூவர்கள அதாவது இசசாநாதய்யா. 1. பக்திதீக்ஷதா. 2. சிரதநைமூர்த்திராவ். 3. இவாகளையும சோதது விசாரித்து முடிவு செய்யவேணுமாய் மனு மூலமாய்க் கேடடுககொள்ளுகிறாாகள்.

இதினபேரில வாதி ஆதமநாதபண்டிதரை விசாரிக்கப் படுகிறது.

வாதி ஆத்மநாதபண்டிதர்.

கோர்ட்டாரவர்கள கேழ்வி —

கே.—உமக்கு பதிமூன்று பிரதிவாதிகளைத்தவிர வேறு மூன்று பேர்வழிகள் பிரதிவாதிகளாக சேர்க்கவேண்டியதாயிருக்கிறதா; வாஸ்தவந்தானு?

வி.—மூன்றுபோகளை பிரதிவாதிகளாக சேர்க்கத்தக்கதல்ல. இசசாநாதயயா. 1. பகதிதீக்ஷதர். 2. சிரத்தைமூர்த்தி

ராவ் 3. இவர்கள் மூன்றுபேர்களும் எனக்குவேண்டிய சாதகத்தைச்செய்கிறவாகளானதால், அவர்களை பிரதிவாதிகளாகச சேர்கக ஞாயமில்லை. சேர்க்கக்கூடாதென்று சொல்வதோடுங்கூட,

ஷை தரப்பு வக்கீல் விவேகமூர்த்தி ஐயர் சொல்லுகிறார்.

சகலஜீவாகளுக்கும் பந்தமென்ன, மோக்ஷமென்ன, இவைகள் மனதினாலேயே உண்டாகிறது. வேறு எதனாலுமாகவில்லை. அது எப்படியெனில ஸ்வபாவமாகவே மனதானது நிர்மலமுள்ளது அப்படி நிர்மலமுள்ள மனதை அசுத்தங்களாகிற இராகாதி 13 பிரவாததிகளுடைய பந்தங்களை அணுகவொட்டாமல் இனி ஏதாவது நருளவருமோ, இன்றைக்கிருப்பார நாளை இல்லை; சுவரைவைதது சிததிரமெழுதவேணுமெ; காற்றுள்ளபோதேதூறறிவிடவேணுமெனறு தூணடுதல்செய்து தடடிக்கொடுத்து வருகிறதானது இசசை. இன்னமும் ஜபம, தபம, விருதம, ஹோமம இயாகம பல புணணிய கருமங்களைச்செய்து வரவேணுமாய்த தோறறி வைக்கிறதானதும் இச்சை. அதினால சகலபிராணிகளும கிரமக்கிரமமாக ஏறிவநது புருஷார்த்தத்தை அடையசசெய்வதானது இசசையே. பின்னும் இச்சையானது மேலிட்டு சற்குருவைத்தேடி அவராலே உபதேசம்பெற்று மனதை அசுத்தாதிகளில் சேரவிடாமல் நிர்மலமாக்கி குருவினிடமபக்தியை சசெல்ல வைககிறது. பக்தி அதிகரித்தபோது குருவாக்கியத்தினிடத்திலும், வேதாந்த வாக்கியத்தினிடத்திலும், ஈஸ்வரனிடத்திலும், அதிகமான சிரத்தை உண்டாகிவிடுகிறது. இப்படிககு இநத இசசா-பக்தி-சிரத்தை இம்மூன்றும எனை ககூடியே சாதகமுள்ள புருஷர்களானதால அசுத்தங்களாகிய இராகாதி பதிமூனறு பெயர்களுடன சேரக்கூடாதென்றும, இந்த மூவாகளையுமநீக்கிய பதிமூன்று பிரதிவாதிகளைமாத்திரமே தண்டிக்கவேண்டியதாயிருக்கிறதென்று வாதி வக்கில விவேகமூர்த்திஐயர சொல்லிவிட்டுகுந்தினார்.

பிரதிவாதி வக்கீல் மண்ணாசை உடையார் எதிர் வாதம் பேசுகிறார்.

வாதி ஆக்ஷேபமானது சுத்த பிசகு. ஷை தரப்பு வக்கீல் சொல்வது முழுமையும் விரோதம். யாதெனில் இநத இராகாதி பதிமூன்று விருத்திகளுக்கும் மனமே மூலகாரணம. அபபடிக்

கொத்த மனதின் தூண்டுதலினுலேயே இந்த இராகாதிகள் அவரவர்களுக்கு ஏற்பட்ட கருமங்களைச்செய்து வருகிருர்கள். அதற்கு இந்த மனமே ஆதிமூலம். எப்படியெனில் நதிகளுக்கு சமுத்திரம் கதிபோலவும், ஸ்திரிகளுக்கு புருஷனே கதிபோலவும், சிஷனுக்கு ஆசான் கதிபோலவும், தலையின்பேரில நெருப்புப்பற்றியெரிகிறவனுக்கும நாக்குவரண்டவனுக்கும தண்ணீர கதிபோலவும, இந்த இராகாதிபதிமூன்று விருத்தங்களுக்கும மனமே கதி. மேலும ஜலவிஸர்ஜனை மலவிஸர்ஜனை பண்ணவேணுமென்று மனதுக்கு இச்சையுண்டாகிறது. அதறகு உபகருவிகளாக பக்தி க்லீந்து சேருகிறது. அதினால பாதைகள் நிவர்த்தியாகி சுகம்பெறுகிறான். இம்மூவரும் கலக்காவிட்டால சரீரத்துக்கே அபாயமுண்டாகிவிடுகிறது. ஆகையால இவர்களை நீக்கிவிட ஞாயமே இல்லை. இம்மூவர்களும என கக்ஷிக்கு சாதகமுள்ளவர்களேயாம். கக்ஷிக்காரர்களாகவே சேர்க்கவேணுமென்றே எதிர் தரப்பு வக்கில் மண்ணுசை உடையார் சொல்லிவிட்டு குந்தினர்

மறுபடி வாதிதரப்பு வக்கீல் வைராக்கியராயா பேசுகிறர்.

பிரதிவாதி தரப்பு வககில சொலலுவது முழுமையும் சட்டத்துக்கு விரோதமானவைகள் யாதெனில முனனொரு காலத்தில் "சுகபிரமரிஷி" எனபவர பரிக்ஷித்து மகாராஜனுக்கு காண்பித்த 'பாகவதம்' எனகிற ஒரு "லா" புஸ்தகத்தில ஒருதீர்மானம விவரிக்கபபட்டிருக்கிறது. எபபடியெனறல இந்த பூமண்டலத்தில் சக்கிரவாத்தியாயும், மகாபலபராக்கிரமசாலியாயும், நல்லநீதியோடு ராஜபரிபாலனஞ்செயது வந்த கட்வாங்கனென்கிற ஒரு ராஜனிருந்தபோது, தேவலோகத்தில் தேவதைகளுக்கும் அசுரர்களுக்கும சண்டை வந்து, தேவர்களாலே யுத்தஞ்செய்யமாட்டாமல் கட்வாஙகனை தேவலோகத்துக்கு அழைத்துக்கொண்டுபோய், அசுரர்களிடத்தில யுத்தஞ்செய்யச் சொல்லி, அந்தப்படி அவன் யுத்தஞ்செய்து அசுரர்களைநாசம்செய்து தேவர்களுக்கு ஜெயம்பண்ணிக்கொடுத்தபடியினுலே, அவர்களும் சந்தோஷித்து என்ன வரம் வேணுமென்று கேட்டபோது எனக்கு யாதொன்றும் குறைச்சலில்லை; ஆனல் எனனுடைய ஆயுளின் பிரமாணத்தை மாத்திரம் தெரியசசொல்லவேணுமென்று கேட்க, உனக்கு ஆயுள் வெகுநாளில்லை; இன்னம் இரண்டு

நாழிகைதான் ஆயுள் இருக்கிறதெனறு தேவர்கள் சொல்லக்கே ட்டவுடனே பரப்பரப்போடு பூலோகம் வந்து, தன குருவிடம போய்வேதாநத நிச்சயததைக்கேட்டு ஈஸ்வரனிடததில இசசை-பகதி-சிரத்தைபண்ணி இரண்டே நாழிகையில மோக்ஷமடைந தானென்று இநத "லா" புஸ்தகததில் கண்டிருப்பதை கோட டார கவனித்து இம்மூவரும என் கக்ஷிக்கே சாதக புருஷாக ளென்றுசொல்லி குநதினா.

இதின்பேரில் கோாட்டார் "லா" புஸ்தகத்தைபபாாதது விட்டு சற்று யோஜித்து, இநத மூவர்களையும கக்ஷிக்காரர்களாக சேர்க்கததக்க திலலையென்று பிரதிவாதிகளின் மனுவைத்தள்ளி போட்டதாக உத்திரவு செய்தபின,

பாததிய மனுக்கொடுத்த சிதாபாசய்யரை விசாரிக்கிறா.

கே.—நீ எநதவூா ?

வி.—நானிருபபது மோகனூர்.

கே.—உன பெயரென்ன ?

வி.—என பெயா சிதாபாசய்யா.

கே.—உறுதியாய்சசொலலு ?

வி.—உறுதியாய்ச் சொலலுகிறேன்.

கே.—உனக்கு இநத நம்பரில் எவ்வித பாத்தியம ?

வி.—தேகமே நான். சகல ஆஸ்திகளும என்னுடையது. சம்பாததியஞ்செய்தது நானே. பெண்டாட்டி பிள்ளைகள் என்னுடையது. நானே பரிபாலனம் பண்ணுகிறவன். என் கையாலேதான் எலலாவறறையுஞ செய்கிறேன். சகல பாக்கியமும் என்னுடையது. இநத பதிமூன்று பிரதிவாதிகளுக்கும் தலைமையானவன் நானே. இந்த வாதிக்கு யாதொரு பாத்தியமுமில்லை. வாதி தரப்பு சாக்ஷிகள் சொன்னது யாவும கட்டுப்பாடானபடியால், தயவுசெய்து என்னுடைய பாததியத்தை ஸ்தாபிக்கவேணுமாய் சிதாபாசய்யா அறிவிக்கிறார்.

இதன்பேரில் கோாட்டாா சிதாபாசய்யரை 14-வது சப்ளிமெண்டு பிரதிவாதியாய் சேர்க்கபபட்டிருப்பதாக உததிரவு செய்தாாகள்.

## பிரதிவாதி தரப்பு சாக்ஷிகளின் விசாரணை.

### 1-வது சாக்ஷி அனுத்மநாத செட்டி

(ஷை தரப்பு வக்கிலால கேழ்கப்படுகிறது.)

கே.—நீர் எந்தவூர் ?

வி.—நானிருப்பது கோசமாபுரமென்றும அன்னமயகோச மென்றும சொலலப்பட்டது.

கே.—இநத நமபா பிரதிவாதிகளேயும வாதியையும தெரி யுமா ?

வி.—நனருய்தெரியும.

கே.—அவாகளுடைய விருததாநதங்களில் உமகருத தெரிந ததை உண்மையாய்ச சொல்லும ?

வி.—எனகருதெரிநததைஉண்மையாயச சொல்லுகிறேன். இநத பதினுலு எதிரிகளின் ஸவபாவமானது மிகவும்மேன்மையா னவைகள். அவர்கள் மிகவும் வரபிரஸாதிகள். ஒவ்வொருவரும் பலபராக்கிரமசாலிகள். அவர்களில்லாவிட்டால் இநத பிரபஞச மேயிலலே. இவாகள் தனக்குத்தானே தோன்றினவர்கள். யாரா லும உண்டுபண்ணப்பட்டவாகளல்ல. ஒரு வமசததை ஒட்டின வாகளுமல்ல. இதறகு வாக்கியம —

सच्चिदानंद स्वरूपे स्वातमन्यारोपितं वपूः ।
स्थुलं तस्यस्वरूपंतु तावत्तत्रनिरूप्यते ॥ १ ॥

இதன் பொருள் —ஸசசிதாநநத ஸவரூபமான தன்னிடத் திலிருந்து ஸ்தூல சரீரம ஆரோபிக்கபபட்டது. அதின்விவர மாவது.—

अस्तिमांसत्य॰जोनाडिरोमचै व यथा तथा ।
क्षितिः पैचविथः प्रोक्तासमांशाः परिकीर्त्तिताः ॥ २ ॥

இதன பொருள்:—அஸ்தி-மாம்சம்-சருமம்-நரம்பு-ரோமம் இவ்வைநதும் பிரதிவியின அம்சம. இதற்கு விவரமாவது:—

பிரதிவியினிடத்தில் பிரதிவி-அஸதி, பிரதிவியினிடத்தில் அப்பு-மாமசம், பிரதிவியினிடத்தில் தேயு-தோல், பிரதிவியினிடத்தில் வாயு-நரமபு, பிரதிவியினிடத்தில் ஆகாசம்-ரோமம், இவ்வைநதும பிரதிவியின கூராகும்.

लालामात्रंतथास्वेदाः शुक्लंश्रोणितमेव च ।

आपः पंचविधाः प्रोक्ताः समांशाः परिकीर्तिताः ॥ ३ ॥

இதன் பொருள்:—வாய் நீர்-மூத்திரம்-வியர்வை-உதிரம்-சுக்கிலம-இவைவைந்தும அப்புவின் அமசம். இதற்கு விவரமாவது.—

ஜலத்தினிடத்தில மண்-வாய் நீர், ஜலததினிடத்தில் ஜலம்-மூத்திரம், ஜலததினிடத்தில நெருப்பு-வியாவை, ஜலததினிடத்தில வாயு-ரகதம, ஜலத்தினித்தில் ஆகாசம்-சுக்கிலம இவ்வைநதும் அபபுவின கூறு.

क्षुधातृष्णा तथानिद्रा आलस्यं संगमं तथा ।

अग्निः पंचविधाः प्रोक्तासमांशाः परिकीर्तिताः ॥ ४ ॥

இதன் பொருள் —பசி-தாகம-நித்திரை-சோம்பல்-சங்கமம-இவ்வைநதும தேயுவின் அமசம இதறகு விவரம்:—

நெருபபினிடததில மண்-பசி, நெருப்பினிடததில் ஜலம-தாகம, நெருப்பினிடததில் நெருபபு-நிததிரை, நெருப்பினிடததில ஆகாசம-சங்கமம், இவ்வைநதும அக்கினியின் கூறு.

धावनंफल्गुनंचैवकुंचनं च प्रसारणं ।

वायुः पंचविधाः प्रोक्ताः समांशाः परिकीर्तिताः ॥ ५ ॥

இதன் பொருள் —கிடத்தல்-நடததல்-இருததல்-ஓடல்-தத்தல்-இவ்வைந்தும வாயுவின் அம்சம். இதற்கு விவரம்.—

வாயுவினிடத்தில் மண்-கிடததல், வாயுவினிடத்தில் ஜலம்-நடத்தல், வாயுவினிடத்தில் அக்கினி-இருத்தல், வாயுவினிடத்தில் வாயு-ஓடல், வாயுவினிடத்தில் ஆகாசம்-தத்தல், இவ்வைந்தும் வாயுவின் கூறு.

रागद्वेष भयं लज्जा मोहंचैव यथा तथा ।
नभः पंचविधाः प्रोक्तः संमांशाः परिकीर्तिताः ॥ ६ ॥

இதன் பொருள் —ராகம்- துவேஷம் - பயம் - வெட்கம்-மோகம்-இவ்வைந்தும் ஆகாயத்தின் அம்சம். இதின் விவரம்:—

ஆகாயத்தினிடத்தில் மண்-ஆசை, ஆகாயததினிடததில ஜலம்-துவேஷம், ஆகாயத்தினிடத்தில் அக்கினி-பயம், ஆகாயத்தினிடத்தில் வாயு-வெடகம், ஆகாயத்தினிடத்தில் ஆகாயம்-மோகம இவ்வைந்தும் ஆகாயத்தின் கூறு.

ஆக இருபத்தைநது தததுவங்களும கூடிய இந்த சரீரமே பிரத்தானமானது. இபபடிக்கொதத சரீரமானது தனக்குத்தானு கவே அனனபானுதிகளைக்கொள்ளக்கொள்ள அபிவிாததியாகி, தத்துவஙகளின கருமஙகளை இடைவிடாமல்செய்துவருவதினல் சரீரம சுகாதிகளை அனுபவிதது வருகிறது அவரவாகளின கருமங்களை விட்டு விட்டால சரீரததுககு அபாயம நேரிடுகிறது. இநத சரீரம போய்விட்டால வாதி ஆதமநாத பண்டிதருககு இருபபிடமேது! ஆகையால் அவருககு இதில யாதொரு பாததியமுமில்லை.

2-வது சாக்ஷி அவிவேகபபத்தன்.

கே.—நீ எநதவூர் ?

வி.—நானிருபபது கோசமாபுரமே.

கே —உன பெயரெனன ?

வி.—என பெயா அவிவேகப்பததன.

கே.—உறுதியாய்சசொல்லு ?

வி.—உறுதியாய்ச்சொல்லுகிறேன்.

கே.—இநத நமபரில் உனக்குத்தெரிந்ததைசசொல்லு !

வி.—இநத எதிரிகளடங்கிய இநத சரீரமானது பஞச மகா பூதஙகளுள் இருபத்தைநது தததுவமாய் பிரிநதிருப்பதுடன் இநதிரியங்களிருககிறு அவயவஙகள யாதெனில்.—

வாக்கியம்.

अहंचप्राणवायुश्चनासिकागंधमेव च ।
वायुः पंचविधाः प्रोक्ताः इत्येतेभुमिपंचकं ॥ ७ ॥

இதன் பொருள்:—அகங்காரம்-பிராணவாயு-கிராணேந்திரியம்-கந்தவிஷயம்-குஹ்யெந்திரியம-இவ்வைந்தும் பிரதிவியின பஞ்சீகிருதி. இதற்கு விவரம் —

பிரதிவியினிடததில் பிரதிவி-குஹ்யெந்திரிய ஸ்தானம இருபபிடம் குதம,-பிரதிவியினிடத்தில அப்பு - கந்ததன்மாத்திரை, பிரதிவியினிடத்தில் அக்கினி-கிராணேந்திரியம ஸ்தானம் நாசி, பிரதிவியினிடததில் வாயு-பிராணவாயு அதின் ஸ்தானம் ஹிருதயம், பிரதிவியினிடத்தில ஆகாசம-அகங்காரம் அதின்ஸ்தானம ஹிருதயம் இவ்வைநதும் பிரதிவியின் பஞ்சீகிருதி.

चिन्तं चापावनायुश्च जिह्वारस न मेव च ।
गुह्यं पंचविधं प्रोक्तः इत्येते जलपंचकं ॥ ८ ॥

இதன பொருள்:—சிததம-அபானவாயு-ஜிஹ்வேந்திரியம ரசவிஷயம-குஹ்யெநதிரியம இவவைநதும அப்புவின் பஞ்சீகிருதி. அதறகு விவரம —

ஜலததினிடத்தில் மண்-குஹ்யெந்திரியம அதின் ஸ்தானம் குய்யம,ஜலத்தினிடததில் ஜலம-ரசதன்மாததிரை, ஜலததினிடததிலஅககினி-ஜிஹ்வேநதிரியம அதின் ஸதானம சிஹ்குவை, ஜலத்தினிடத்தில்வாயு-அபானவாயு அதின்ஸதானம் குதம, ஜலத்தினிடததில ஆகாசம-சிததம் அதின ஸ்தானம நாபி இவவைநதும அப்புவின பஞ்சீகிருதி.

बुध्धिश्चोदा न वायुश्च नेत्रं रूपं तथैवच ।
पाणि. पंचविध' प्रोक्तः इत्येते द्वावाह्निपंचकं ॥ ९ ॥

இதன் பொருள்:—புததி-உதானவாயு-நேததிரேநதிரியம-ரூபவிஷயம-பாதேந்திரியம் இவ்வைந்தும அககினியின பஞ்சீகிருதி. இதறகு விவரம் —

அககினியினிடததில மண்-பாதேநதிரியம அதினிருப்பிடம் பாதம, அக்கினியினிடததில ஜலம்-ரூபதனமாததிரை, அக்கினியினிடததில அக்கினி-நேததிரேநதிரியம் அதினிருபபிடம் நேத்திரம, அக்கினியினிடததில வாயு-உதானவாயு அதின் ஸதானம் கணடம, அககினியினிடத்தில் ஆகாசம்-புத்தி அதி
[illegible] இவ்வைநதும் அக்கினியின் பஞ்சீகிருதி

भानसंव्या न वायुश्च चर्मस्पर्श तथैवच ।
पादः पंचविधः प्रोक्तः इत्येते द्वायुपंचकं ॥ १० ॥

இதன பொருள்:—மனது-வியானவாயு-தொக்கேந்திரியம், பரிசவிஷயம-பாணீநதிரியம இவவைந்தும வாயுவின் பஞசீகிருதி. இதறகு விவரம:—

வாயுவினிடததில மண-பாணிநதிரியம் அதின ஸ்தானம் அஸதம, வாயுவினிடததில் அபபு-பரிசதனமாததிரை, வாயுவினிடததில அககினி-தொககேநதிரியம அதினிருப்பிடம்தொக்கு, வாயுவினிடததில் வாயு-வியானவாயு அதினிருபபிடம சர்வசரீரம், வாயுவினிடததில ஆகாசம-மனது அதினிருபபிடம் கண்டம. இவவைநதும வாயுவின பஞசீகிருதி.

ज्ञानंसमानवायुश्च श्रोत्र शद्वस्त थैवच ।
दाक्च पंचविधः प्रोक्तः ईत्येते द्वयोमपंचकं ॥ ११ ॥

இதன் பொருள்:—ஞானம் சமானவாயு-சுரோததிரேந்திரியம-சப்தவிஷயம-வாககேநதிரியம் இவவைநதும் ஆகாயததின பஞசீகிருதி. இதற்கு விவரம்—

ஆகாயத்தினிடத்தில மண்-வாககேநதிரியம அதினிருப்பிடம வாக்கு, ஆகாயததினிடததில அப்பு-சப்ததன்மாத்திரை, ஆகாயததினிடததில அக்கினி-சுரோததிரேந்திரியம அதினிருப்பிடம செவி, ஆகாயததினிடத்தில வாயு-சமானவாயு அதினிருப்பிடம நாபி, ஆகாயததினிடத்தில் ஆகாயம்-ஞானம அதினிருப்பிடம புருவமததியம் ; இவ்வைநதும ஆகாய பஞ்சீகிருதி.

இபபடிககு இநத சரீரத்தில் அவயவஸ்தானங்களிலடங்கிய தததுவங்கள், அவரவாகளின கருமங்களை கைவிடாமல் ஏத்தியும இரககியும் பநதோபஸதாய நடததிவருவதால் சரீரிகள் துனபததையடையாமல்சுகிததுவருகிறார்கள். இவ்வளவு காரியங்களை இநத எதிரிகள் செய்யாவிட்டால சரீரத்துக்கு அபாயம் வநதுவிடும். அப்படியானால இந்த வாதிஆத்மாநாதபண்டிதருக்கு கதியேது ? அதோகதிதான.

சாற்றுக்கவிகள்.

திருவளர்ராமதாசர் தனசரிதக்
கீர்த்தனமும் புவியினிற்றிகழ
மருவளர்கமல மாலேவேயசின்ன
சாமிமால் [illegible]த்தனனாதனை
உருவளர்ராமக் கிருட்டினனென்னு
முத்தமனிறையாறு புரைதீர்
குருவளர்திறமா ணிக்கவேளச்சிற்
குதவுறவியற்றினன் மன்னோ.

---

வித்துவான திருமயிலை

சண்முகம்பிள்ளை அவர்கள் இயற்றியது.

ஆசிரியச்சந்த விருத்தம்

இருக்குவிருக்குமுதலாதலின் மற்றதனி
னிருமபொருளேமுழுமுதலென் றியம்பிடுமனறிருநாம
பெருகக்குமலியகலமநதப பெருங்கருணைப்பிழம்பைப
பெரிதடையுமகோபனறைப பிரபலகாதையினைச
சருக்கரையுந்தீம்பாலுங் கைப்பச்செந்தமிழ்க்கீர்த
தனைவடிவாயெம்மனோர் தமக்கருளிச்செய்தான
தருக்கண்மலிதருபொழிலசூழ்க் குத்தனூராச்சின்ன
சாமியெனப்புவிபுகழந்தண்ணா குலமாமணியே.

---

# முகவுரை

ஸ்ரீபக்தவத்ஸலனுகியும் ஸ்ரீபக்தபராதீனனுகியும் ஸ்ரீஸ்வயம்ப்ரகாச பரஞ்சோதிமய பரமாத்ம ஸ்வரூபியாகியும் *ஸர்வலோகோஜ்ஜீவன பரமபுருஷார்த்த வேதவேதாந்தோபநிஷத்வாக்ய பிரதிபாத்தியனுகியும் ஸத்வ ரஜஸ் தமோகுண சூன்யனுகியும் பிரகிருதி சம்பந்தமான இச்சத்வாதி குணத்ரயங்களுள்ள திரிமூர்த்திஸ்வரூபமாய் மாயாமோஹித சித்தர்களுக்குப் பிராந்தியினுல் தோன்றுகின்றவனுகியும் சுத்த ஸாத்விக விலக்ஷண க்ஞான ஸாதுசஜ்ஜன மனோரஞ்சன நிரதிசயானந்தமாகியும் தோன்றல் மறைதல் குவிதல் விரிதல் முதலிய விகாரமில்லாது தன்னிலேதானுயிருக்கின்ற பராபரவஸ்துவாகியும் ஸம்ஸார அபார ஸமுத்ர பாரதுவாரக்கரையாகியும் ஸமானுதிகரஹிததுரையாகியும் தன்னிலும் வேறானதொன்றில்லாது தானெல்லாவற்றிலுமிருக்கும் ஸ்வரூபனுகி அவாங்மானஸ கோசரனுமாகின்ற ஸ்ரீமந்நாராயணனென்னும் சக்கரவர்த்தித் திருமகன்

"வைதேஹிஸஹிதம ஸுரத்ருமதலே ஹைமேமஹாமண்டபே
மத்யேபுஷ்பகமாஸனே மணிமயே வீராஸனே ஸுஸ்திதம
அக்ரேவாசயதி ப்ரபஞ்ஜனஸுதே தத்வம்முனிப்யபரம
வியாக்யாந்தமபரதாதிபி பரிவ்ருதம ராமம்பஜேஸ்யாமளம்"

என்னும் ஸ்ரீமத் பரம ஹம்ஸ பரிவ்ராஜகாசாரிய ஸ்ரீசங்கரபாத ஸ்வாமிகளாகிய ஆதிசங்கராசாரிய ஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீராம கர்ணாம்ருதாந்தர்க்கதமான இந்த ச்லோகத்தாத்பரியத்தின்படியே ஸ்ரீ வைகுண்டத்தில் திவ்விய திருமாமணிமண்டபத்தில் சீதாலக்ஷ்மண பரதசத்ருக்ன ஸஹிதராயெழுந்தருளியிருக்க, இந்த ஸ்ரீராமப்பிரம்மமூர்த்தியின் சந்நிதியிலுள்ள நித்ய முக்தர்களான முனீஷ்வரர்களின் பொருட்டு ஸ்ரீ ஆஞ்சநேயமூர்த்தி பரதத்வத்தை வெளியிட்டுக்கொண்டிருந்த காலத்தில், ஸ்ரீபகத்விஜயகர்த்த பிரமாணுஸாரமாய் இந்லோகத்தில் பெருமைதங்கிய வனத்தில் அருமையுள்ள பிரம்மநிஷ்டையி லெழுந்தருளிய சகல ரிஷிகளும் ஸ்வர்க்கலோகவாசிகளான தேவர்களுடனே சென்று, கற்பகவிருக்ஷநிழலில் வீற்றிருக்கும் ஸர்வோத்க்ருஷ்டனுகிற ஸ்ரீஹரிபரந்தாமனை வலம்வந்து பணிந்து மனோவாக்கு காயங்களைத் தங்கள் வசப்படுத்தி, ஓ! ஆதிநடு முடிவில்லாத ஆதிபுருஷனை ஸர்வஸ்வரூபியே! ப்ரணதார்த்திகள் தங்கள் உத்தமஞானத்தினுல ஆஸ்ரயிக்கத்தக்க, அஷ்டாக்ஷரப்பிரதிபாத்யனை ஸ்ரீவாசுதேவனே! ஓ எங்கள் ஆராவமுதமே! உமக்குத் தெண்டன் சமர்ப்பிக்கின்றோம்; என்று வெகுவிதமாய் அந்தரங்கபக்தியாய ஆனந்தாதிசயத்தோடு துதித்துத் தங்களைமறந்து சித்திரதீபம்போலசையாமல் நிற்க ஸ்ரீஎம்பெருமான் அவர்களைக் குளிரக்கடாக்ஷித்து; ஓ! ரிஷிகளே? தேவர்களே? உங்களுக்கு உற்றதியாது? என்னிடத்தில் என்னபெறக்கருதி யிவண்வந்தீர்களோ அதைச் சொல்லுங்களென்றும், இனியுங்கள் மனோசஞ்சலங்களை வெல்லுங்களென்றும் அருளிச்செய்யவே, சகலரும் அளவிலாச் சந்தோஷ பரிதர்களாய் அலர்ந்த தங்கள் திவ்விய நேத்திர பங்கஜங்களில் நின்

ரூபதனமாத்திரை ராஜஸவியஷ்டியுனுலுண்டானது பாதேந்திரியம. இவவைநதும ரூபதன்மாத்திரையினுலுண்டானவைகள.

ரஸோதன்மாததிரை யெனபது விஷயம.-ரஸோதன்மாததிரை-ஸாததுவிகஸமஷ்டியினுலுண்டானது சிததம. ரஸோதன் மாததிரை - ராஜஸ ஸமஷ்டியினுலுண்டானது அபானவாயு. ரஸோதனமாததிரை - ஸாததுவிக வியஷ்டியினுலுண்டானது குறமேநதிரியம. ரஸோதனமாததிரை-ராஜஸவியஷ்டியினு லுண்டானது குறுமேநதிரியம இவவைநதும ரஸதனமாததிரையினுலுண்டானவைகள.

கநததனமாததிரை யெனபது விஷயம. கநததன்மாததிரை-ஸாததுவிகஸமஷ்டியினுலுண்டானது அகஙகாரம. கநததன மாததிரை-ராஜஸ ஸமஷ்டியினுலுண்டானதுபிராணவாயு. கநத தன்மாததிரை - ஸாததுவிக வியஷ்டியினுலுண்டானது கிராணேநதிரியம. கநததனமாததிரை - ராஜஸவியஷ்டியினுலுண டானது பாயுரு. இவவைநதும கநததன்மாததிரையினுலுண் டானவைகள.

இப்படிக்கி வாககு-பாதம்-பாணி-குயயம-பாயுரு எனபபடு கிற காமேநதிரியஙகளைநதும, சுரோததிரம-தொக்கு-சக்ஷு--சிகுவை-ஆககிருணம எனபபடுகிற ஞானேநதிரியங்களைநதும்,சபத-ஸபரிச-ரூப-ரஸ - கநதம எனபபடுகிற இவை ஐநதும, பிராண-அபான - உதான-வியான-சமானன் இவை ஐநதும, மனம-புததி-சிததம-அகஙகாரம, இவை நானகும, இவைகள் இருபததிநாலு தத்துவஙகளும சோநது கூடியது க்ஷேததிரம. இதற்கு ஆதாரமாய்க கட்டியிருக்கிறது இநத சரீரம. இபபடிகொதத சரீரமில்லாவிடில ஆதமநாதபணடிதருக்கு இருபபிடம ஏது' சுவதநதரமேது' அவருக்கு இதில யாதொரு பாததியமுமிலலையெனறு எனக்குத தெரியும.

6-வது சாக்ஷி குடிமயககக்கோனை.

கே.—நீ எநதவூா ?

வி.—நானிருபபது நிஷேததமஙகலம.

கே.—உன பெயரெனன ?

வி —என பெயா குடிமயககக்கோனை.

கே.—உறுதியாய்ச சொல்லு?

வி.—உறுதியாகவே சொல்லுகிறேன்

கே.—இந்த விஷயத்திலே தெரிந்ததை ஒவ்வொன்றும விவரமாய்ச சொல்லு?

வி.—இந்த பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களுள் தத்துவங்கள் 96-ம ஸ்தூலசரீர சூக்ஷுமசரீரமாய்த்தோன்றி தத்துவங்களாகிய ஒவ்வொருவருடைய அதியாசசரிய கர்பிதங்களினால் பலவர்ணஙகளாயும, பல நாமஙகளாயும, பல செயகைகளாயும் காட்டும் அபபியாச கித்தியாதிகள் யாதெனில்:—

தைசசனென்றும, பிராதிபாசகனெனறும், ஸவப்பன கர்பிதனென்றும், அபிமானமும், கண்டஸ்தானமும, ஸவப்பனுவஸ்தையும, சுவேசசாபோகமும, உகாரமாததிரையும், ஸாததுவீக இராஜஸ-தாமஸ-குணமும், இச்சாசகதியும், பிராணமயம்-மனோமயகோசம, இவைகளிருநதுகொண்டு நான பேசுகிறவன் ஊமையனென்றும, நான்கொடுக்கிறவன் கையிலில்லாதவனென்றும, நான் நடக்கிறவன் முடவனென்றும், நான் கிறு நீர் விடுகிறவன் மலவிஸர்ஜனை பண்ணுகிறவனெனறும, ஆகிய வாக்காதிகாமேந்திரியங்களுடைய அததியாசங்களும, பின் நான வைதீகன், நான் லௌகிகன என்ற சப்தபோதனங்களும, சீதளம-உஷ்ணம-மிருது-கடினமென்ற ஸ்பரிசபேதனஙகளும, தித்தித்தல்-புளித்தல்-கசத்தல்-துவாததல-காறுதலாகிய ருசிபேதனங்களும், நறுநந்தம்-துறகநதம-சுகநதமாகிய கநதபேதனஙகளும, இபபடிக்கிசப்தாதி பஞ்ச விஷயஙகளுடைய அத்தியாசங்களும, நான கேழுகிறேன் செவிடனென்றும, நான் பாாவையுடையவன குருடனென்றும், நான ருசி அறிகிறவன் அரோசிகனெனறும, இப்படிக்கிஞானேநதிரியஙகளுடைய அத்தியாசஙகளும, நான பசி தீபனமுடையவன் பசி இலலாதவனெனறும, நான் தாகமுடையவன தாகமிலலாதவனென்றும், நான சக்தியுள்ளவன பலமில்லாதவனெனறும, நான் வீரமுடையவன் வீரமிலலாதவனென்றும, நான தும்முகிறவன், நான இருமுகிறவன், நான் விக்கலெடுக்கிறவன, நான கண்ணிமையை மூடிமூடி திறக்கசசெய்கிறவனென்றும் நான்யோகி, நான் அடவாதி, நான் ஆகாசகமனம் பண்ணு

